[17th February 1959

SRI K. B. S. MANI : இந்த இடத்தில் ஒரு ரெஸ்ட் ஹவுஸ் மிகவும் அவசியமாக இருப்பதால் அதை பலவகு சீக்கிரம் அமைக்க அமைச்சர் நடவடிக்கை எடுப்பார்களா ?

THE HON. SRI P. KAKKAN : நேற்று முன் தினம்தான் அந்தத் தாலுக்காவிற்குப் போனேன். அப்போது அங்கே அந்த ரெஸ்ட் ஹவுஸைப் பற்றிச் சொன்னார்கள். நமது நிதி நிலைமைக்குத் தக்கவாறு தான் ரெஸ்ட் ஹவுஸ்கள் கட்டப்பட்டு வருகின்றன. இப்போது அதிகப்படி பணம் இல்லாததால் "டெபர்" செய்திருக்கிறோம். இருந்தாலும் இதைப் பரிசீலனை செய்து பார்க்கலாம்.

*Manicka pangu sea-shore*

*372 *Q.*—SRI K. B. S. MANI (on behalf of Sri C. Muthiah): கனம் பொது மராமத்து அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா ?

(அ) மயூரம் தாலுக்கா, மாணிக்க பங்கு கடற்கரையைப் பலப்படுத்த திட்டம் ஏதேனும் உண்டா ?

(ஆ) அப்படியானால், எவ்வளவு தொகைக்கு எப்போது ஆரம்பிக்கப் படும் ?

THE HON. SRI P. KAKKAN : (*a*) Yes, Sir.

(*b*) Detailed plans and estimates for the work, which is estimated to cost Rs. 40,000 have been prepared and they are at present under the scrutiny of the Chief Engineer. Suitable action will be taken on receipt of plans and estimates from the Chief Engineer.

SRI K. B. S. MANI : ஸார், இதை எவ்வளவு குறுகிய காலத்திலே செய்யமுடியுமோ அவ்வளவு குறுகிய காலத்தில் செய்யமுடியுமா ? உத்தேசமாக எப்போது செய்து முடிக்கப்படும் என்று சொல்லமுடியுமா ?

THE HON. SRI P. KAKKAN : பிளான், எஸ்டிமேட் எல்லாம் வந்த பிறகு வெகு சீக்கிரம் செய்யப்படும்.

*Culverts*

*378 *Q.* SRI P. G. MANICKAM : கனம் பொது மராமத்து அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) கோயம்புத்தூர் ஜில்லா, பவானி தாலுக்காவிலே கவந்தபாடி-பவானி மெயின் ரோட்டிலே குறுக்கே பாய்ந்து செல்லுகின்ற மூன்று பள்ளங்களின் மேல் பாலங்களை (Culverts) கட்டுவதற்காகத் தொகை சாங்ஷன் செய்யப்பட்டிருக்கிறதா ?

(ஆ) இவ்வேலைகள் எப்போது ஆரம்பிக்கப்படும் ?

THE HON SRI P. KAKKAN : (*a*) & (*b*) These two works have been included in the Second Five-Year Plan and will be sanctioned and taken up for execution depending on the availability of funds.

SRI P. G. MANICKAM : ஸார், இரண்டு பள்ளங்கள் மீது கல்வெர்ட் போடுவது எடுத்துக்கொள்ளப்பட்டிருப்பதாக அமைச்சர் அவர்கள் தெரிவித்தார்கள். மூன்றாவதாக எடுக்கப்படவேண்டியது கவந்தபாடியில் இருக்கும் ஒரு பள்ளத்தின் மீது கல்வெர்ட் போடுவது. இது ஒரு முக்கியமான இடம். இங்கே சந்தை இருக்கிறது. வண்டிகள் சந்தைக்கு அந்த வழியாகப் போக வேண்டியிருக்கிறது. பவானிவாய்க்கால் தண்ணீர் அங்கே போவதால் வண்டிகள் போவதற்கு இடைஞ்சலாக இருப்பதால் இதற்குக் கூடிய சீக்கிரம் எஸ்டிமேட் போட்டு சீக்கிரம் எடுத்துக்கொள்ளத் தகுந்த நடவடிக்கை எடுக்கப்படுமா என்று அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI P. KAKKAN : அதை நான் கவனிக்கிறேன்.